# (55) சங்கீதம் (கர்நாடகம்)

## வினாத்தாள் கட்டமைப்பு

**வினாத்தாள் I - நேரம் : இரண்டு மணித்தியாலங்கள்.**

ஐந்து விடைகளைக் கொண்ட 50 பல்தேர்வு வினாக்களைக் கொண்டுள்ளது. **எல்லா** வினாக்களுக்கும் விடையளித்தல் வேண்டும். ஒரு வினாவுக்கு 01 புள்ளிகள் வீதம் மொத்தப் புள்ளிகள் 50 ஆகும்.

**வினாத்தாள் II - நேரம் : மூன்று மணித்தியாலங்கள்.** (மேலதிக வாசிப்பு நேரம் 10 நிமிடங்கள்)

இவ்வினாத்தாள் **"அ" பகுதி, "ஆ" பகுதி, "இ" பகுதி** என **மூன்று** பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவற்றுள்,

**பகுதி அ** - **எல்லா** வினாக்களுக்கும் விடையளிக்கப்படல் வேண்டும்.

**பகுதி ஆ** - **இரண்டு** வினாக்கள் கொடுக்கப்பட்டுள்ளது. அவற்றுள் விரும்பிய **ஒரு** வினாவுக்கு விடையளித்தல் வேண்டும்.

**பகுதி இ** - **ஐந்து** வினாக்கள் கொடுக்கப்பட்டுள்ளது. அவற்றுள் விரும்பிய **மூன்று** வினாக்களுக்கு விடையளிக்கப்படல் வேண்டும். எல்லாமாக இவ்வினாத்தாளில் **ஐந்து** வினாக்களுக்கு விடையளித்தல் வேண்டும்.

ஒரு வினாவுக்கு 20 புள்ளிகள் வீதம் ஐந்து வினாக்களுக்கும் = 20 x 05
= 100 புள்ளிகள்

**செய்முறைப் பரீட்சை**

**வினாத்தாள் III** இற்குரிய மொத்தப்புள்ளிகள் = 200

**இறுதிப் புள்ளியைக் கணித்தல் :**

| | | | |
|---|---|---|---|
| **வினாத்தாள் I** | = | $50 \times 2$ | = 100 |
| **வினாத்தாள் II** | = | | = 100 |
| **வினாத்தாள் III** செய்முறைக்குரிய இறுதிப்புள்ளிகள் | = | | = 200 |
| இறுதிப்புள்ளிகள் | = | $400 \div 4$ | = 100 |

# (55) சங்கீதம் (கர்நாடகம்)

## வினாத்தாள் I

**அறிவுறுத்தல்கள் :**

- **எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக.**
- **சரியான அல்லது மிகப் பொருத்தமான விடையைத் தெரிவு செய்க. பல்தேர்வு வினாக்களுக்கு விடையளிப்பதற்குரிய தாள் வழங்கப்படும்.**

---

**1.** 'தஞ்சம் என்றாலே' எனத் தொடங்கும் ஆதி தாள வர்ணம் அமைந்துள்ள இராகத்தின் தாய் இராகம்
(1) சாருகேசி (2) கரஹரப்ரியா (3) ஹரிகாம்போஜி (4) பைரவி (5) சங்கராபரணம்

**2.** ஆரோஹண அவரோஹணத்தில் அல்லாமல் சஞ்சாரங்களில் மட்டும் அன்னியஸ்வரம் ஒலிக்கும் இராகம்
(1) முகாரி (2) கமாஸ் (3) அடாணா (4) காம்போதி (5) பைரவி

**3.** மணிப்பிரவாள நடையில் அமைந்துள்ள பாடல் வகை
(1) தேவாரம் (2) திருவாசகம் (3) திருப்புகழ் (4) திருவிசைப்பா (5) திருப்பல்லாண்டு

**4.** சதுஸ்ரகதியில் அமைந்த கண்டஜாதி ரூபகதாளத்தின் மொத்த அட்சரம்
(1) 21 (2) 28 (3) 35 (4) 49 (5) 63

**5.** கலைஞரின் திறமை, ஞானம் என்பவற்றிற்கேற்ப ஸ்வரக்கோர்வைகளை பிரஸ்தாரம் செய்து பாடுவது
(1) இராக ஆலாபனை (2) தானம் (3) பல்லவி (4) நிரவல் (5) கற்பனாஸ்வரம்

**6.** $\overset{\cup}{8}$ இவ் அங்கம் குறிப்பது,
(1) புலுதவிராமம் (2) புலுதம் (3) குருவிராமம் (4) குருதுருதம் (5) குரு

**7.** அலகுயாழ் என அழைக்கப்படும் வாத்தியம்
(1) கடம் (2) முகர்சிங் (3) கஞ்சிரா (4) வீணை (5) வயலின்

**8.** மாது சம்பந்தமான அணிகளில் இடையழகு என வர்ணிக்கப்படுவது,
(1) சாகித்தியம் (2) யமகம் (3) அனுப்ராசம் (4) அந்தியப்ராசம் (5) மடக்கு

**9.** ஜாவளி எனும் உருப்படிக்குப் **பொருத்தமற்ற** கூற்று,
(1) பச்சை சிருங்கார ரஸத்தை வெளிப்படுத்தும் உருப்படி
(2) பல்லவி, அனுபல்லவி, சரணம் எனும் அங்கவித்தியாசங்களைக் கொண்டது
(3) 19ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட உருப்படி
(4) அப்பியாச கானத்திற்கும் சபாகானத்திற்கும் பொதுவானது
(5) சில விலோமசாபு தாளத்திலும் அமைந்துள்ளன

**10.** தெலுங்கு மொழியில் சூளாதிகளை இயற்றியவர்
(1) புரந்தரதாஸர் (2) திருப்பதி நாராயணசாமி
(3) திருப்பதி அன்னமாச்சாரியார் (4) பட்டாபி ராமய்யர்
(5) தாளப்பாக்கம் சின்னையா

**11.** கீதகோவிந்தத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர்
(1) சேர் எட்வின் (2) பாத்கண்டே (3) அமிர்குஸ்ரு (4) பீதோவன் (5) சாம்பமூர்த்தி

**12.** அடாணா

(1) ஓர் ஏக அன்னியஸ்வர பாஷாங்க இராகம்
(2) ஒரு திவி அன்னியஸ்வர பாஷாங்க இராகம்
(3) ஓர் உபாங்க இராகம்
(4) ஒரு ஸ்வராந்தர இராகம்
(5) ஒரு திரி அன்னியஸ்வர பாஷாங்க இராகம்

**13.** 30 - 40 வரையான அனுதாபத் தந்திகளைக் கொண்டிருக்கும் வாத்தியம்

(1) கிற்றார் (2) சித்தார் (3) பியானோ (4) வீணை (5) சாரங்கி

**14.** A - கிரம - சம்பூர்ண வக்ர ஆரோஹண - அவரோஹணம்
B - அஷ்டகமாக விளங்கும் ஆரோஹண - அவரோஹணம்
C - ஆரோஹணத்திலும் அவரோஹணத்திலும் ஸ்வரங்கள் விலக்கப்பட்டிருத்தல்
D - ஆரோஹணத்திலும் அவரோஹணத்திலும் ஸ்வரங்கள் ஒரே வகையாக இருத்தல்
E - ஆரோஹண - அவரோஹணத்தில் அன்னியஸ்வரத்தைக் கொண்டிருத்தல்

மேலே கூறப்பட்ட கூற்றுகளுள் ஜனக இராகத்திற்குப் பொருத்தமான கூற்று

(1) A, E (2) B, D (3) B, E (4) C, D (5) D, E

**15.** சதுர்த்தண்டிப் பிரகாசிகையில் தமது கருத்துக்களை பத்துத் தலைப்புகளில் விளக்கியவர்

(1) வெங்கடமகி (2) ஜெயதேவர்
(3) கோவிந்தாச்சாரியார் (4) சாம்பமூர்த்தி
(5) புரந்தரதாஸர்

**16.** தால், திரிதால், பாஸ்டோ ஆகிய புதிய தாளங்களை அறிமுகப்படுத்தியவர்

(1) தான்சேன் (2) பாத்கண்டே (3) அமிர்குஸ்ரு (4) மொஸாட் (5) பீதோவன்

**17.** பண்ணாங்கமாகப் பாடப்படும் திருவாசகத்திற்கு உதாரணம்

(1) பாரொடு விண்ணாய் (2) பால்நினைந்தூட்டும்
(3) அம்மையே அப்பா (4) பண்சுமந்த பாடல்
(5) பூசுவதும் வெண்ணீறு

**18.** பின்வரும் கீர்த்தனைகளுள் சமஷ்டி சரணம் இடம்பெறும் கீர்த்தனை

(1) கோபிகா மனோகரம் (2) ஞானம் அருள்வாய்
(3) பார்வதி நாயகனே (4) தேவி நீயே துணை
(5) சிவ சிவ சிவயென

**19.** கர்நாடக இசையில் பதம் என்ற உருப்படிக்கு இணையான ஹிந்துஸ்தானி உருப்படி

(1) கயால் (2) கஸல் (3) தரானா (4) தும்ரி (5) துருபத்

**20.** உடும்புத்தோல் ஒட்டிய பாகம் கொண்ட இசைக்கருவி

(1) தவில் (2) மிருதங்கம் (3) பறை (4) கெஞ்சிரா (5) டொல்கி

**21.** திருக்குறுந்தொகைப் பாடல்களை மரபு வழியாகப் பாடும் இராகம்

(1) அடாணா (2) ஹரிகாம்போஜி (3) பூர்விகல்யாணி (4) சங்கராபரணம் (5) ஆரபி

**22.** "Little book for the keyboard" எனும் ஆக்கத்தை இயற்றியவர்

(1) மொஸாட் (2) பாக் (3) பீதோவன் (4) நிக்கலஸ் ஜோன் (5) ஹேடர்

**23.** ஹாஸ்ய ரஸத்திற்குரிய இராகம்

(1) சாவேரி (2) வஸந்தா (3) ஆபோகி (4) ஹிந்தோளம் (5) ஸ்ரீரஞ்சனி

**24.** ஸரிகபதநிஸ் - ஸ்நிதபகரிஸ என்ற ஆரோஹண அவரோஹணத்தையுடைய இராகம்

(1) மலயமாருதம் (2) தன்யாசி (3) மத்யமாவதி (4) கமாஸ் (5) ஸரஸாங்கி

**25.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக.

- பத்து இராகங்களைக் கொண்ட கமலநாஸ்ய என்ற இராகமாலிகையை இயற்றியவர்
- உத்சவ பிரபந்தம் என்ற நூலை இயற்றியவர்
- துருவ பதங்கள், கஸல்கள் போன்றவற்றையும் இயற்றியவர்
- 1813 ஆம் ஆண்டு திருவாங்கூர் அரச குடும்பத்தில் பிறந்தவர்

மேற்கூறிய கூற்றுகளுக்குப் பொருத்தமான வாக்கேயகாரர்

(1) தியாகராஜ சுவாமிகள் (2) அன்னமாச்சாரியார்
(3) சியாமா சாஸ்திரிகள் (4) முத்துஸ்வாமி தீட்சிதர்
(5) ஸ்வாதித்திருநாள் மகாராஜா

**26.** 'உன்னையன்றி யாரென்னை' எனத் தொடங்கும் தானவர்ணத்தை இயற்றியவர்

(1) முத்தையா பாகவதர் (2) தர்மபுரி சுப்பராயர்
(3) பத்மா வீரராகவன் (4) நாகர்கோவில் அருணாச்சல அண்ணாவி
(5) வீரபத்திர ஐயர்

**27.** வேதமத்திம யதி என அழைக்கப்படுவது

(1) கோபுச்சய யதி (2) ஸ்ரோதோவக யதி
(3) சம யதி (4) டமருக யதி
(5) மிருதங்க யதி

**28.** பூதவேதாள வகுப்புப் பாடல்களை இயற்றியவர்

(1) சம்பந்தர் (2) அருணகிரிநாதர் (3) நாவுக்கரசர் (4) சேக்கிழார் (5) சேந்தனார்

**29.** பைரவி இராகத்தின் தமிழிசைப் பெயர்

(1) கௌசிகம் (2) பழம்பஞ்சுரம் (3) செந்துருத்தி (4) தக்கேசி (5) வியாழக்குறிஞ்சி

**30.** 1, 3, 8 ஆவது மாத்திரைகளில் தட்டு இடப்பட்டு 6 ஆவது மாத்திரையில் தட்டு இடப்படாத தாளம்

(1) திரிதால் (2) தாதரா (3) தீப்சந்தி (4) ஜப்தால் (5) ஏக்தால்

**31.** கன, நய, தேசியம் பாடும் முறையில் சிறந்தவர்

(1) ஸ்வாதித்திருநாள் மகாராஜா (2) அருணகிரிநாதர்
(3) பைடாலகுருமூர்த்தி சாஸ்திரிகள் (4) சியாமா சாஸ்திரிகள்
(5) புரந்தரதாஸர்

**32.** பியானோ வாத்தியத்தின் ஸ்தாயி எல்லை

(1) 1 ½ (2) 3 (3) 3 ½ (4) 5 (5) 7 ½

**33.** குறிஞ்சி இராகத்தின் ஆரோஹண அவரோஹணம் முறையே

(1) ஸநிஸரிகமபதநி
தபமகரிஸநிஸ
(2) ஸரிகமபதநி
நிதபமகரிஸநி
(3) ஸநிஸரிகமபத
தபமகரிஸநிஸ
(4) ஸநிஸரிகமபத
தபமகரிஸநிஸ
(5) ஸநிஸரிகமபதநி
நிதபமகரிஸநிஸ

**34.** யுத்தகளத்தில் பயன்படுத்தப்படும் வாத்தியம்

(1) குடமுழா (2) ரணபேரி (3) வீணை (4) பிடில் (5) சங்கு

**35.** பல்லவி ஷேசய்யரால் எட்டு மணிநேரம் பாடியதாகக் கூறப்படும் இராகம்

(1) வஸந்தா (2) சண்முகப்பிரிய (3) ஹிந்தோளம் (4) சாவேரி (5) ஸ்ரீரஞ்சனி

**36.** நவரசகன்னட என்பது

(1) ஒரு ஸ்வராந்தர இராகம் (2) ஒரு ஷாடவ இராகம்
(3) ஒரு ஷாடவசம்பூர்ண இராகம் (4) ஓர் ஔடவ இராகம்
(5) ஒரு வக்ர இராகம்

**37.** அருணகிரிநாதர் சந்த நயத்தோடு பாடிய பாடல்களுள் தற்போது கிடைத்துள்ள பாடல்களின் எண்ணிக்கை

(1) 168 (2) 175 (3)1008 (4) 1324 (5) 16000

**38.** A - 72 மேளகர்த்தா இராகங்களில் கீர்த்தனைகளை இயற்றியவர்

B - 'ஹரிதும் ஹரே' என்ற பாடலைப் பாடியவர்

C - பஞ்சவர்ண தூது இயற்றியவர்

D - 'கற்பக வல்லிநின்' எனும் பாடலை இயற்றியவர்

E - எவரெஸ்ட் ரொக்கெட் என பாராட்டப்பட்டவர்

மேற்குறிப்பிடப்பட்ட கூற்றுகளுள் வீரமணி ஐயருக்குப் பொருத்தமான கூற்றுகள்

(1) A, B (2) A, C (3) A, D (4) A, E (5) B, C

**39.** பதம் என்னும் உருப்படி வகையின் சிற்பி எனக் குறிப்பிடப்படுவர்

(1) வெங்கடமகி (2) ஷேத்ரக்ஞர் (3) ஜெயதேவர்
(4) ஸ்ரீபாலதாஸ் (5) பட்டாபி இராமைய்யர்

**40.** ஹிந்துஸ்தானி இசையில் பயன்படுத்தப்படும் இசைக்கருவிகள்

(1) சித்தார், ஸரோட் (2) வீணை, ஸரோட்
(3) கிற்றார், சித்தார் (4) புல்லாங்குழல், நாதஸ்வரம்
(5) சக்ஸபோன், கிளாரினெட்

**41.** கிருதி என்ற இசைவடிவத்தின் ஸ்தாயி எல்லை

(1) 4½ ஸ்தாயி முதல் 5 ஸ்தாயி வரை (2) 1 ஸ்தாயி முதல் 2 ஸ்தாயி வரை
(3) 2 ஸ்தாயி முதல் 4 ஸ்தாயி வரை (4) 1½ ஸ்தாயி முதல் 2 ஸ்தாயி வரை
(5) 2 ஸ்தாயி முதல் 3 ஸ்தாயி வரை

**42.** "நீ மறவாதெனையாள் ஜகதீசா" என்ற சரண வரிகளைக் கொண்ட மத்யமகால கீர்த்தனையின் ஆரம்ப வரி

(1) ஞானம் அருள்வாய் (2) மாதயை நிதி
(3) கோபிகாமனோகரம் (4) பார்வதி நாயகனே
(5) ஸரஸ்வதி விதியுவதே

**43.** பாத்கண்டே என்ற இசைக்கலைஞர் கையாண்ட இசைக்கருவிகளுள் ஒன்று

(1) ஸரோட் (2) சாரங்கி (3) தில்ரூபா (4) ரபாப் (5) புல்லாங்குழல்

**44.** 'வலசி வச்சி' எனத் தொடங்கும் இராகமாலிகை வர்ணத்தின் உத்தராங்கப் பகுதியில் அமைந்துள்ள இராகங்கள் முறையே

(1) யதுகுலகாம்போஜி, மோகனம், ஸ்ரீராகம், பிலஹரி, காம்போஜி
(2) மோகனம், காம்போஜி, யதுகுலகாம்போஜி, பிலஹரி, ஸ்ரீராகம்
(3) காம்போஜி, யதுகுலகாம்போஜி, பிலஹரி, மோகனம், ஸ்ரீராகம்
(4) ஸ்ரீராகம், மோகனம், பிலஹரி, யதுகுலகாம்போஜி, காம்போஜி
(5) பிலஹரி, மோகனம், ஸ்ரீராகம், காம்போஜி, யதுகுலகாம்போஜி

**45.** சாஸ்திரிய சங்கீதம் வாசிக்கப் பயன்படும் கிற்றார் வாத்தியத்தின் தந்திகளின் எண்ணிக்கை

(1) 4 (2) 6 (3) 7 (4) 8 (5) 24

**46.** ஸ்யாஹி என்ற கறுப்புப்பசை நிரந்தரமாகப் பூசப்பட்டிருக்கும் பாகத்தினையுடைய வாத்தியம்

(1) மிருதங்கம் (2) ஸரோட் (3) ஸாரங்கி (4) கடம் (5) தபேலா

**47.** மென்டலின் என்னும் இசைக் கருவியைக் கர்நாடக இசையில் வாசித்து சிறப்புப் பெற்றவர்

(1) எம். எஸ். கோபாலகிருஷ்ணன்
(2) அலாவுதீன் கான்
(3) சீனிவாசராவ்
(4) கத்ரி கோபால்நாத்
(5) ப. ஸ்ரீனிவாஸ்

**48.** ஷண்முகப்பிரியா இராகத்தின் க, ப, த ஸ்வரங்களை கிரகபேதம் செய்யும்போது தோற்றுவிக்கப்படும் இராகங்கள் முறையே,

(1) சித்ராம்பரி (66), தேனுக (9), சூலினி (35)
(2) தேனுக (9), சூலினி (35), சித்ராம்பரி (66)
(3) தேனுக (9), சித்ராம்பரி (66), சூலினி (35)
(4) சூலினி (35), தேனுக (9), சித்ராம்பரி (66)
(5) சூலினி (35), சித்ராம்பரி (66), தேனுக (9)

**49.** ஐரோப்பிய இசையில் வழங்கப்படும் பெண்களுக்குரிய குரல்வகைகளில் ஒன்று

(1) ஆல்டோ (2) மெஸோ ஸொப்ரானோ (3) பரிடோன்
(4) பாஸ் (5) டெனர்

**50.** விவாதி தோஷமற்ற மேளங்களின் தொகை

(1) 12 (2) 16 (3) 24 (4) 32 (5) 40

* * *

# (55) சங்கீதம் (கர்நாடகம்)

## வினாத்தாள் II

**அறிவுறுத்தல்கள் :**

* **"அ"** பகுதியில் உள்ள **எல்லா** வினாக்களுக்கும் **"ஆ"** பகுதியில் இருந்து **ஒரு** வினாவிற்கும் **"இ"** பகுதியில் இருந்து **மூன்று** வினாக்களுக்குமாக மொத்தம் **ஐந்து** வினாக்களுக்கு விடை தருக.

---

### "அ" பகுதி

**1.** (i) இராக ஆலாபனைக்கு அடுத்ததாக பாடப்படும் மனோதர்மப்பிரிவு யாது?

(ii) ஷண்முகப்ரியா இராகம் அசம்பூர்ண மேள பத்ததியில் எவ்வாறு அழைக்கப்படும்?

(iii) மகாநாடகவீணை என அழைக்கப்படும் வாத்தியம் எது?

(iv) 'ஆரபிமானம்' என்ற இராகமாலிகையில் 'சந்தமும் நான்' என்ற பாடல் வரி அமைந்துள்ள இராகம் எது?

(v) கீரவாணியின் நேர் பிரதிமத்யம இராகம் யாது?

(vi) ஸிம்ஹநந்தன தாளத்தில் அமைந்த கானடா இராக தில்லானா யாது?

(vii) ஹிந்துஸ்தானி தாளத்தில் தட்டு இடம்பெறாத பகுதி எவ்வாறு அழைக்கப்படும்?

(viii) நாட்டை, கௌளை, ஆரபி, வராளி, ஸ்ரீ ஆகிய இராகங்கள் ஐந்தும் எவ்வாறு சிறப்பாக அழைக்கப்படும்?

(ix) இராகமாலிகையில் விசேடமாக இடம்பெறும் இசையணி யாது?

(x) ஹிந்துஸ்தானி இசை உருப்படிகளில் **அந்தரா** என அழைக்கப்படுவது யாது?

(xi) நீர் அறிந்த பிரதேச இசைப் பாடல்களில் நாடகப் பாடல்கள் **இரண்டினைத்** தருக.

(xii) இராகத்தின் 10 இலட்சணங்களுள் ஒன்றான பகுத்துவத்தின் உட்பிரிவுகள் எவை?

(xiii) காம்போஜி இராகத்திற்கு இணையான **இரண்டு** பண்கள் தருக.

(xiv) டாக்டர் வீ.ப.க. சுந்தரம் எழுதிய **இரு** இசை ஆய்வு நூல்களைத் தருக.

(xv) ஸ்வாதித்திருநாள் மகாராஜா எழுதிய ஹரிகதைகள் **இரண்டினைத்** தருக. (20 புள்ளிகள்)

### "ஆ" பகுதி

**2.** (i) கமகம் என்பதன் வரைவிலக்கணத்தைக் கூறுக. (03 புள்ளிகள்)

(ii) கமகம் பற்றிக் கூறும் **இரு** நூல்களைக் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)

(iii) தசவித கமகங்களைத் தருக. (05 புள்ளிகள்)

(iv) அவற்றில் விரும்பிய **ஐந்தினை** உதாரணங்களுடன் விளக்குக. (2×5=10 புள்ளிகள்)

**3.** (i) கோடு கொண்டு வாசிக்கப்படும் வீணையின் அமைப்பினை ஒத்த வாத்தியம் யாது? (02 புள்ளிகள்)

(ii) இவ்வாத்தியத்தின் அமைப்பினை விளக்கி வாசிக்கும் முறையினையும் விளக்குக. (10 புள்ளிகள்)

(iii) இவ்வாத்தியத்தின் படத்தினை வரைந்து பாகங்களைக் குறித்துக் காட்டுக. (06 புள்ளிகள்)

(iv) இவ்வாத்தியத்தை சுருதி சேர்க்கும் முறை பற்றி விளக்குக. (02 புள்ளிகள்)

## "இ" பகுதி

4. பின்வரும் இராகங்களை இனங்கண்டு **இரண்டினைத்** தெரிவுசெய்து அவற்றின் இலட்சணங்களை விரிவாகத் தருக. (உருப்படிகள், சஞ்சாரங்கள் எழுதப்படல் வேண்டும்.)
   - (i) கபநிஸ் - நிபகரி - ஸரிகபநிஸ்ா
   - (ii) 20 ஆவது மேளத்தின் ஜன்னியமான சம்பூர்ண இராகம்
   - (iii) ஷண்முகப்ரியா
   - (iv) சூர்யகாந்தத்தின் ஜன்னியமான ஔடவ ஷாடவ இராகம் (10×2=20 புள்ளிகள்)

5. கீழே தரப்பட்டுள்ள இசை உருப்படிகளில் **இரண்டினைத்** தெரிவுசெய்து அவற்றின் இலட்சணங்களை விரிவாகத் தருக.
   - (i) கிருதி
   - (ii) ஜாவளி
   - (iii) தேவாரம்
   - (iv) இலட்சணகீதம் (10×2=20 புள்ளிகள்)

6. (i) பின்வரும் இசைக்கலைஞர்களை இனங்காண்க.
   - (அ) வெண்கலக்குரலோன் என்ற பாராட்டைப் பெற்றவர்
   - (ஆ) ரிஷ்யசிருங்கர் என்ற படத்தில் பாலரிஷ்ய சிருங்கராக நடித்தவர்
   - (இ) தங்கக் கோபுரத்தைப் பரிசாகப் பெற்றவர்
   - (ஈ) திருப்பாவைமணி என்ற பட்டம் பெற்றவர் (2×4=8 புள்ளிகள்)

   (ii) மேற்குறிப்பிட்ட இசைக் கலைஞர்களில் ஒருவரைத் தெரிவுசெய்து அவரது வாழ்க்கை வரலாற்றினையும் 'இசைப் பணியினையும் விரிவாக எழுதுக. (12 புள்ளிகள்)

7. (i) மேலைத்தேய இசையின் லிபிமுறை எவ்வாறு அழைக்கப்படும்? (02 புள்ளிகள்)

   (ii) பன்னிரண்டு ஸ்வரஸ்தானங்களுக்குரிய மேலைத்தேய இசைக் குறியீட்டுப் பெயர்களைக் குறிப்பிடுக. (06 புள்ளிகள்)

   (iii) பின்வரும் இராகங்களில் விரும்பிய **இரண்டின்** ஆரோஹண அவரோஹணங்களை மேலைத்தேய லிபி முறைப்படி ஐந்து சமாந்தரக் கோடுகளில் குறித்துக் காட்டுக.
   - (அ) ஹரிகாம்போஜி
   - (ஆ) சாருகேசி
   - (இ) பந்துவராளி
   - (ஈ) ஆபோஹி (6×2=12 புள்ளிகள்)

8. 20 ஆம் நூற்றாண்டில் இலங்கையில் ஏற்பட்ட இசைவளர்ச்சி பற்றி விளக்குக.

**அல்லது**

நீர் பார்த்து இரசித்த குரலிசைக் கச்சேரி பற்றி விமர்சனக் கட்டுரை எழுதுக. (20 புள்ளிகள்)

* * *

# (55) சங்கீதம் (கர்நாடகம்)

## செய்முறைப் பரீட்சை

**வினா** 1 செய்முறை

**ஷண்முகப்ரியா** இராகத்தில் அமைந்த **'முருகா'** என்னும் ஆ

தி தாள வர்ணத்தினை இரண்டு காலங்களிலும் பாடுக.

**வினா** 2 செய்முறை

கானடா இராகத்தில் அமைந்த **'நெரநம்மி'** என்னும் அடதாள வர்ணத்தினை

இரண்டு காலங்களிலும் பாடுக.

**வினா** 3 செய்முறை

**'வலசி வச்சி'** என்னும் நவராகமாலிகா வர்ணத்தினை இரண்டு காலங்களிலும் பாடுக.

அல்லது

**'இன்னும் என்மனம்'** என்னும் பதவர்ணத்தினைப் பாடுக.

**வினா** 4 செய்முறை

விரும்பிய ஓர் இராகத்தினை சிறு ஆலாபனை செய்து, அவ் இராகத்தில் கீர்த்தனை பாடி, பொருத்தமான இடத்தில் 1ஆம், 2ஆம் காலங்களில் கற்பனாஸ்வரமும் பாடுக.

(பாடத்திட்டத்தில் உள்ள கீர்த்தனையாக இருத்தல் வேண்டும்.)

**வினா** 5 செய்முறை

**'ஆரபிமானம்'** என்னும் இராகமாலிகையைப் பாடுக.

அல்லது

**'மாதயை'** என்னும் சௌககாலக்ருதியைப் பாடுக.

**வினா** 6 செய்முறை

**அஷ்டபதி/ ஜாவளி** ஒன்றினைப் பாடுக. (பாடத்திட்டத்தில் உள்ளது)

**வினா 7** செய்முறை

திருப்புகழ் ஒன்றினைப் பாடுக. (பாடத்திட்டத்தில் உள்ளது)

**வினா 8** செய்முறை

கீழே தரப்பட்ட **ஹம்ஸத்வனி** இராகத்தில் அமைந்த ஸ்வர சஞ்சாரத்தினை **சதுஸ்ர ஜாதி திரிபுடை** தாளத்தில் பாடுக.

**வினா 9** செய்முறை

கேட்கப்படும் **இரண்டு** வினாக்களுக்கு விடையளிக்குக.

**வினா 10** செய்முறை

கீழே தரப்பட்டுள்ள பாடலை, பொருத்தமான தாளத்திற்கு அமைவாக இசையமைத்துப் பாடுக.

**வினா 11** செய்முறை

**கீ போட்** (ஸ்வரப்பலகை) வாத்தியத்தில் பின்வரும் வினாக்களை வாசித்துக் காட்டுக.

(i) 3வது **ஸ்வரவரிசையை** மூன்று காலங்களிலும் வாசித்துக் காட்டுக.

(ii) **திவ்ய நாம கீர்த்தனை**யினை வாசித்துக் காட்டுக.

**வினா 12** செய்முறை

பின்வரும் வினாக்களை **வீணை/ வயலின்/ நாதஸ்வரம்/ புல்லாங்குழல்** வாத்தியத்தில் வாசித்துக் காட்டுக.

(i) 2வது **ஜண்டை வரிசை** அல்லது 2வது **மேல் ஸ்தாயி வரிசையை** மூன்று காலங்களிலும் வாசிக்குக.

(ii) **'துள்ளிக் குதிக்குது'** என்னும் சிறுவர் பாடலினை வாசிக்குக.

பார்த்துப் பாடல்

இராகம் :- ஹம்சத்வனி தாளம் :- சதுஸ்ரஜாதி திரிபுடை

| | | | |
|---|---|---|---|
| $|_4$ | o | o | |
| கபகரி கா , ரி | ஸரிகப | நிபஸா | \|\| |
| பநிஸ்ரி ஸ்ஸ் நிப | ஸ்நிபக | கரிஸா | \|\| |

**இசையமைத்தலுக்குரிய பாடல்.**

ஆழி சூழ் அழகிய தாய்நாடு இயற்கை
அன்னை அலங்கரித்த தாய்நாடு - ஒன்றாய்
கூடியே இனமத பேதம் களைந்திந்த
குவலயத்தில் உயர கைகோர்த்திடுவோம்.

**வினா 9** செய்முறை

**கேள்வி ஞானம்**

பின்வரும் நான்கு வினாக்களுள் யாதாயினும் **இரண்டினைத்** தெரிவு வெய்து அவற்றை குறிப்பிடப்பட்ட முறையில் வினவுதல்.

1. **இராகத்தை இனங்காணல்.**

   இராக ஆலோபனை செய்தல் / ஸ்வர சஞ்சாரம் பாடிக்காட்டி அவ்இராகத்தை இனங்காணச் செய்தல்.

2. **தாளத்தை இனங்காணல்.**

   தாளத்தை செய்கை முறையில் போட்டுக்காட்டி அத்தாளத்தை இனங்காணச் செய்தல்.

3. **உருப்படியை இனங்காணல்.**

   குறித்த ஒரு உருப்படியைப் பாடிக்காட்டி அவ்உருப்படியை இனங்காணச் செய்தல்.

4. **வாத்திய இசையை இனங்காணல்.**

   குறித்த ஒரு வாத்திய இசையின் ஒலிப்பதிவினை (ஒலிப்பதிவு நாடா, இறுவட்டு) ஒலிக்கச் செய்து அவ்வாத்தியத்தை இனங்காணச் செய்தல்.

* * *

# (55) சங்கீதம் (கர்நாடகம்)

## செய்முறைப் பரீட்சை

### புள்ளி வழங்கும் திட்டம்

| வினா | உருப்படி | | புள்ளிப் பங்கீடு | புள்ளிகள் | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| 01 | ஆதிதாளவர்ணம்<br>(இரண்டு காலங்களிலும்) | ஆபோஹி<br>**அல்லது**<br>ஷண்முகப்பிரியா<br>**அல்லது**<br>கீரவாணி | இராகசுத்தம்<br>சுருதிசுத்தம்<br>தாளப்பிடிப்பு<br>பாவம்<br>மனனம் | 4<br>4<br>4<br>4<br>4 | 20 |
| 02 | அடதாளவர்ணம்<br>(இரண்டு காலங்களிலும்) | கானடா<br>**அல்லது**<br>ஹம்சத்வனி | இராகசுத்தம்<br>சுருதிசுத்தம்<br>தாளப்பிடிப்பு<br>பாவம்<br>மனனம் | 5<br>5<br>5<br>5<br>5 | 25 |
| 03 | நவராகமாலிகா வர்ணம்/<br>பதவர்ணம் | வலசி வச்சி<br>**அல்லது**<br>ஸ்வாமி நானுந்தன்<br>**அல்லது**<br>இன்னும் என்மனம் | இராகசுத்தம்/<br>இராகக்கலப்பின்மை<br>சுருதி சுத்தம்<br>தாளப்பிடிப்பு<br>இராகஸ்வரூபம், பாவம்<br>மனனம் | 5<br>5<br>5<br>5<br>5 | 25 |
| 04 | விரும்பிய இராகம்பாடி அவ் இராகத்தில் கீர்த்தனை பாடி பொருத்தமான இடத்தில் 1ஆம், 2ஆம் காலங்களில் கற்பனாஸ்வரம் பாடுக. | பாடத்திட்டத்தில் உள்ள உருப்படியாக இருத்தல் வேண்டும் | •இராகஆலாபனை<br>சுருதிசுத்தம்<br>ஸ்வரஸ்தானசுத்தம்<br>இராக பாவம்<br>இராக ஆலாபனைக் கட்டமைப்பு முறை | <br>3<br>3<br>3<br>2 | 11 |
| | | | •கீர்த்தனை<br>சுருதிசுத்தம்<br>தாளப்பிடிப்பு<br>இராகசுத்தம்<br>உச்சரிப்பு<br>இராகபாவம்<br>மனனம் | <br>2<br>2<br>2<br>2<br>2<br>2 | 12 |
| | | | •கற்பனாஸ்வரம்<br>சுருதிசுத்தம்<br>ஸ்வரஸ்தான சுத்தம்<br>தாளப்பிடிப்பு<br>கற்பனாஸ்வரம் பாடும்முறை | <br>3<br>3<br>3<br>3 | 12 |
| 05 | இராகமாலிகா/<br>சௌககாலக்ருதி | ஆரபிமானம்<br>**அல்லது**<br>**பாஹிமாம்ஸ்ரீ**<br>**அல்லது**<br>**மாதயை** | சுருதிசுத்தம்<br>தாளப்பிடிப்பு<br>இராகசுத்தம்/<br>இராகக்கலப்பின்மை<br>இராகபாவம்<br>மனனம் | 3<br>3<br><br>3<br>3<br>3 | 15 |

| வினா | உருப்படி | | புள்ளிப் பங்கீடு | புள்ளிகள் | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| 06 | அஷ்டபதி/<br>ஜாவளி/<br>பதம்/<br>தில்லானா | | சுருதிசுத்தம்<br>தாளப்பிடிப்பு<br>இராகபாவம்<br>மனனம் | 4<br>4<br>4<br>3 | 15 |
| 07 | தேவாரம் | பாடத்தில் உள்ளது | பண்முறை<br>சுருதிசுத்தம்<br>தாளப்பிடிப்பு<br>பாவம்<br>மனனம் | 4<br>3<br>3<br>3<br>2 | 15 |
| | **அல்லது**<br>திருப்புகழ் | பாடத்தில் உள்ளது | இராகசுத்தம்<br>சுருதிசுத்தம்<br>தாளப்பிடிப்பு<br>பாவம்<br>மனனம் | 4<br>3<br>3<br>3<br>2 | 15 |
| | **அல்லது**<br>நாட்டார்பாடல் | விரும்பியது | நாட்டார் பாடல் மெட்டு<br>சுருதிசுத்தம்<br>தாளப்பிடிப்பு<br>பாவம்<br>மனனம் | 4<br>3<br>3<br>3<br>2 | 15 |
| | **அல்லது**<br>மெல்லிசைப்பாடல் | விரும்பியது | இராகம்<br>சுருதிசுத்தம்<br>தாளப்பிடிப்பு<br>பாவம்<br>மனனம் | 3<br>3<br>3<br>3<br>3 | 15 |
| 08 | பார்த்துப்பாடல் | ஆபோகி,ஹம்சத்வனி,<br>கல்யாணி, கீரவாணி,<br>பந்துவராளி,<br>ஷண்முகப்பிரியா,<br>ஆரபி,<br>மத்தியமாவதி,<br>ஹம்சத்வனி,<br>ஹிந்தோளம் | தாளப்பிடிப்பு<br>ஸ்வரஸ்தானசுத்தம்<br>சுருதிசுத்தம் | 3<br>3<br>2 | 8 |
| 09 | கேள்வி ஞானம் | இரண்டு வினாக்கள் கேட்டல் | 1 ஆவது வினா<br>2 ஆவது வினா | 4<br>4 | 8 |
| 10 | பாடலுக்கு இசையமைத்தல் | கொடுக்கப்பட்ட பாடலுக்கு விரும்பிய இராகத்தில் இசையமைத்தல் | இராகபாவம்/<br>இசையமைப்பு<br>தாளம் | 2<br>2 | 4 |
| 11 | கீபோட் (ஸ்வரப்பலகை) | வாத்தியத்தில் வாசித்துக் காட்டும் வினா<br>I ஸ்வரவரிசை (1) | ஸ்வரஸ்தானம்<br>தாளம் | 2<br>2 | 4 |
| | | II சஞ்சாரிகீதம்<br>**அல்லது**<br>திவ்யநாமகீர்த்தனை | ஸ்வரஸ்தானம்<br>தாளம்<br>மனனம் | 2<br>2<br>2 | 6 |

| வினா | உருப்படி | | புள்ளிப் பங்கீடு | புள்ளிகள் | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| 12 | வீணை/வயலின்/<br>நாதஸ்வரம்/<br>புல்லாங்குழல் | வாத்தியத்தில் வாசித்துக்காட்டும் வினா.<br>I ஸ்வரவரிசை (1)<br>**அல்லது**<br>ஜண்டை வரிசை (1)<br>**அல்லது**<br>மேல்ஸ்தாயிவரிசை (1)<br>**அல்லது**<br>அலங்காரம் ஏகம் ரூபகம் | ஸ்வரஸ்தானம்<br>தாளம்<br>மூன்றுகாலங்களிலும் வாசித்தல் | 4<br>3<br>3 | 10 |
| | | II திவ்யநாம கீர்த்தனை<br>அல்லது<br>சிறுவர்பாடல்<br>(துள்ளிக்குதித்து) | ஸ்வரஸ்தானசுத்தம்<br>தாளப்பிடிப்பு<br>இராகபாவம்<br>மனனம் | 3<br>3<br>2<br>2 | 10 |
| | | **அல்லது**<br>மிருதங்க வாத்தியத்தில் வாசிப்பதற்கான வினா.<br>I தா தீ தொம், நம், பயிற்சிகள் ஒன்றினை மூன்று காலங்களிலும் வாசித்துக்காட்டல் | விரல் பிரயோகம்<br>லயசுத்தம் | 2<br>2 | 4 |
| | | II தாகிட (4 வகை)/<br>கிடதக (4 வகை)/<br>கிடகிடதக (4 வகை)<br>பயிற்சியில்<br>ஒன்றினை மூன்று காலங்களிலும்<br>வாசித்துக்காட்டல் | விரல் பிரயோகம்<br>லயசுத்தம்<br>பாடஅமைப்பு<br>மனனம் | 2<br>2<br>2<br>2 | 8 |
| | | III எட்டு அட்சரப் புரட்டல்/<br>பதினாறு அட்சரப் புரட்டல் பயிற்சியில் ஒன்றினை மூன்று காலங்களிலும் வாசித்துக்காட்டல் | விரல் பிரயோகம்<br>லயசுத்தம்<br>பாட அமைப்பு<br>மனனம் | 2<br>2<br>2<br>2 | 8 |
| | | **அல்லது**<br>தபேலா<br>வாத்தியத்தில்<br>வாசிப்பதற்கான வினா.<br>I சதுஸ்ரநடைப் பயிற்சி/<br>திஸ்ரநடைப் பயிற்சி/<br>கண்ட நடைப் பயிற்சியில்<br>ஒன்றினை மூன்று<br>காலங்களிலும்<br>வாசித்துக்காட்டல் | விரல் பிரயோகம்<br>லயசுத்தம்<br>பாட அமைப்பு<br>மனனம் | 3<br>3<br>2<br>2 | 10 |
| | | II சதுஸ்ரநடையில்/ அமைந்த பாடல்<br>திஸ்ரநடையில்<br>கண்ட நடையில் அமைந்த பாடலிற்கு<br>தபேலா வாத்தியத்தை<br>வாசித்துக்காட்டல் | விரல் பிரயோகம்<br>லயசுத்தம்<br>பாட லுடனான ஒத்திசைவு | 4<br>3<br>3 | 10 |